# சித்தர் இயக்கமும் கிறிஸ்துவின் இயக்கமும்

- ஒரு கையேடு





மூதறிஞர் பொன்னு ஆ. சத்தியசாட்சி



கிருபா பதிப்பக வெளியீடு

# சித்தர் இயக்கமும் கிறிஸ்துவின் இயக்கமும்

## - ஒரு கையேடு

1999 ஏப்பிரல் 5 திங்கள் 6 செவ்வாய் ஆகிய நாட்களில்
தென்னிந்தியத் திருச்சபை சென்னைப் பேராயம்
நடத்திய

**சித்தர் இலக்கிய மாநாடும்**
**கருத்தரங்குகளும்**

எனும் விழாவில் உதவியாக இருப்பதற்கு
சென்னைப் பேராயச் சித்தர் இலக்கிய மாநாட்டு
விழாக்குழுவின்றால் வெளியிடப்பட்டது.

**நூலாக்கம் :**

பேராசிரியர் **பொன்னு ஆ. சத்தியசாட்சி**

மறுபதிப்பாக வெளியிடுவது
**கிருபா பதிப்பகம், சென்னை**

# சித்தர் இயக்கமும் கிறிஸ்துவின் இயக்கமும்

முதற்பதிப்பு : ஏப்ரல் 1999
மறுபதிப்பு : ஜூலை 2018

அச்சமைப்பு & வடிவமைப்பு
**கேம்ப்ரோடு பாக்கியம் பிரஸ்**
கேம்ப்ரோடு, சென்னை - 73
அலைபேசி : 9025199081

விலை : ரூ. 50/-
நூல்கள் கிடைக்குமிடம்:
கிருபா பதிப்பகம்
1,5ஆவது குறுக்குத் தெரு,
தனலட்சுமி நகர், சேலையூர்
சென்னை - 600 073
அலைபேசி : 9003197577 / 6383483789
மின்னஞ்சல் : mmftamizh@gmail.com



# கிருபா பதிப்பகம்

1,5 ஆவது குறுக்குத் தெரு, தனலட்சுமி நகர்,
சேலையூர், சென்னை - 600 073. ☎: 9003197577

## பதிப்புரை

தமிழ்ச்சமய உலகிலும் சிந்தனைப் பரப்பிலும் எப்போதும் அனைவரது தனிக்கவனத்தையும் ஈர்க்கக்கூடிய சமுதாய சீர்திருத்தச் சுடர்களைாகத் திகழ்பவர்கள் சித்தர்கள். அவர்களது புரட்சிகரச் சிந்தனைகள் ஓர் இயக்கமாகவே உருவெடுத்து, தமிழ்ச்சமுதாயத்தில் மாபெரும் மறுமலர்ச்சியை விளைத்துள்ளன. அவ்வாறே, அவர்களது மருத்துவம், அறிவியல், யோகம் முதலிய துறைகள் சார்ந்த நற்றொண்டுகளும் அவர்கள் தம் சித்து வலிமையால் நிகழ்த்திய அருஞ்செயல்களும் மக்களது போற்றுதலுக்கும் பெரு வியப்புக்கும் காரணமாய் அமைந்துள்ளன. இவர்தம் சித்து விளையாட்டுகளை வைத்து ஆன்மீக உலகில் இவர்களை அறிவுக்கெட்டா அருஞ்செயல்கள் நிகழ்த்தும் மாயவித்தைக்காரர்கள் போலப் படம்பிடித்து, இவர்களையும் இவர்கள் சமாதி கொண்டுள்ளதாகச் சொல்லப்படும் இடங்களையும் பற்றி அறிவுக்கொவ்வாத - ஆய்வுலகம் ஏற்காத பல மூட நம்பிக்கைகளை உருவாக்கிப் பரப்பி, அதனை வைத்து இலக்கிய/ சமய வணிகம் செய்ய முனைவார் ஒரு புறம் இருக்க, இவர்களது புரட்சிகரமான சமய/ சமுதாயம் சார்ந்த சீர்திருத்தச் சிந்தனைகளையும் ஞானதத்துவங்களையும் தெளிவுபடுத்தி - மக்களிடையே அவற்றைப் பரப்பி, மூடநம்பிக்கைகளின் முடை நாற்றத்தில் மூழ்கிக் கிடக்கும் சமுதாயம் விழிப்புற வைத்திட அயராதுழைக்கும் சமுதாய / சமயநெறிச் சான்றோர் மற்றும் ஆய்வாளர் மறுபுறம்.

இவ்வகையில், மேற்சுட்டப்பட்ட இரண்டாம் பிரிவினராக, இந்நூல் சித்தர் இயக்கம் வெளிப்படுத்திய பேருண்மைகளையும், **'நானே உலகின் ஒளி'** எனப் பிரகடனப்படுத்தி, உலகுக்கு மெய் வழியையும், மெய்ஞ்ஞானத்தையும் உணர்த்திட உலகினில்

மானிடனாக உதித்து, ஓர் பேரியக்கத்தை கிறிஸ்து நெறியாக நிறுவி, இவ்வுலகை நன்னெறியில் உய்த்துவரும் இயேசுகிறிஸ்து பெருமான் போதித்த பேருண்மைகளையும் ஒப்பிட்டுணர்த்தும் ஒரு சிறு முயற்சியாகவே இக்கையேடு வடிவமைக்கப்பட்டுள்ளது.

1999 ஏப்ரல் 5,6 நாட்களில் தென்னிந்தியத் திருச்சபை சென்னைப் பேராயத்தின் சார்பாக, அப்போதைய பேராயர் சமூக சிந்தனையாளர் – தலித் ரத்னா **மாமறைத்திரு. மா. அசரியா** அவர்களால் முன்னெடுக்கப்பட்ட சித்தர் மாநாடு மற்றும் கருத்தரங்கை ஒட்டி வெளியிடப் பெற்ற சிறுநூலின் மறுபதிப்பே இக்கையேடு. இக்குறு நூலைத் தயாரித்த மூதறிஞர் **பேராசிரியர் பொன்னு ஆ. சத்தியசாட்சி** அவர்களோடு இணைந்து, பேராயர் அசரியா அவர்கள் ஆணைப்படி மாநாட்டின் அமைப்பாளராகப் பணியாற்றிடும் பேறு பெற்றேன். இந்நூலின் உள்ளமைந்திருக்கும் கருத்துகளும் சிந்தனைகளும் இன்று சுமார் இருபதாண்டுகள் கழித்தும் தமிழ்ச்சமுதாயத்துக்கு மிகவும் தேவைப்படுவதை உணர்ந்தமையாலும் சித்தர் இலக்கியத்தையும் கிறிஸ்தவ இறையியலையும் ஒப்பிட்டுரைக்கும் தரமான நூல்கள் பலவற்றை மக்கள் பலரும் விரும்பி வேண்டி நிற்பதாலும் இவ்வெளியீடு கொண்டுவரப்பட்டது. இதனைக் கண்ணுறும் ஒவ்வொருவரும் இவ்வுண்மைகளை உணர்ந்து தெளிவுறவும் பிறரையும் தெளிவுறுத்தவும் இறையருள் பாலிக்க வேண்டுமென வேண்டி, கிருபா பதிப்பகம் சார்பாக இந்நூலை வெளியிடுகிறோம்.

இந்நூலை வெளியிட அனுமதியளித்துதவிய கிருபா பதிப்பக உரிமையாளர் திருமதி. இவாஞ்சலின் அருள்மலர் கிராந்தி, நூலின் பழைய படியைத் தேடிக் கொடுத்துதவிய திரு. G.J. பாண்டித்துரை, நூலை நன்கு அச்சாக்கம் செய்த பாக்கியம் அச்சகத்தினர், வடிவமைப்பு செய்த திரு. அரவிந்த், தட்டச்சு செய்த திருமதி. சுகந்தி ஜெபராஜ் ஆகியோர் எம் ஆழ்ந்த நன்றிக்குரியவர்கள்.

ஜூலை 2018
சென்னை

**மோ. மைக்கேல் பாரடே**
பதிப்பாசிரியர்
கிருபா பதிப்பகம் சார்பாக

முதற்பதிப்பில் இடம்பெற்ற

# முகவுரை

தென்னிந்திய திருச்சபை சென்னைத் திருமண்டிலம் **'சித்தர் இலக்கிய மாநாடும் கருத்தரங்குகளும்'** என்றொரு புத்தம் புதிதான விழா எடுக்கின்றது. (5,6 - ஏப். 1999) சித்தர்களைப் பற்றிய மாநாடுகள் முன் எப்போதாவது நடந்திருக்கலாம். எனினும் அண்மைக் காலத்தில் அப்படியொரு முயற்சி எடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. அதினும், கிறிஸ்தவத் திருச்சபை இப்படி ஒரு மாநாட்டை நடத்துவது என்பது தமிழ்த் திருச்சபை வரலாற்றில் இதுவே முதன்முறை. இத்தகு ஒரு பெருமையை சென்னைப் பேராயம் தட்டிக் கொண்டுவிட்டது. நம்முடைய பேராயர் டாக்டர் மாசிலாமணி அசரியா அவர்கள் தாம் பேராயர் பணியிலிருந்து இன்னும் இரண்டொரு நாட்களில் ஓய்வு பெறவிருக்கும் நெருக்கடியிலும் இத்தகைய அரியதொரு மாநாட்டை நடத்திட வேண்டுமெனத் துணிவு கொண்டது ஒரு அருஞ்செயலாகும்.

இப்படியொரு மாநாட்டை நடத்துவதில் ஒரு அருத்தம் இருக்கிறது. மதங்களின் பெயரைச் சொல்லி சிறுபான்மைக் கிறிஸ்தவர்களைத் தொலைப்பதற்கென்று சில மதத்தர்களில் சிலர் திட்டமிட்டிருக்கிறார்கள் என்பது வெளிப்படை. இந்நிலையிலும் நமது தமிழ்ச் சித்தர்களையும் விவிலியத் தீர்க்கரையும் நினைத்துப் பார்ப்பது நன்றேயாகும். சித்தர்கள், பல மதங்களிலும் கடைப்பிடிக்கப்பட்டு வரும் அறிவுக்கு ஒவ்வாத செயற்பாடுகளைக் கடிந்துரைத்த புரட்சியாளர்கள், சாதி வேறுபாடுகளைச் சாடியவர்கள், மிக எளிய வாழ்க்கையை மேற்கொண்டிருந்த சீர்திருத்தவாதிகள். நிட்டை முயற்சிகளால் செயற்கரியனவற்றைச் செய்து கொண்டிருந்தவர்கள். சமுதாயத்தில் சமத்துவத்தைப் போதித்தவர்கள். நல்ல மருந்துகளைக் கண்டுபிடித்து மக்களுக்கு உதவியவர்கள். இவர்களில் பெரும்பான்மையானவர்கள் பின் தள்ளப்பட்ட மக்களைச் சேர்ந்தவர்கள். இவர்களில் இந்துக்களும் இசுலாமியர்களும் கிறிஸ்தவர்களும் எச்சமயத்தையும்

சாராதவர்களும் இருந்திருக்கிறார்கள். எனவே, இப்போது நாட்டில் நிலவி வருகின்ற நிலைமையை நோக்குமிடத்து இத்தகு மாநாடு இன்றியமையாததேயாகும் எனல் வேண்டும்.

டாக்டர் மோசஸ் மைக்கேல் பாரடே, சித்தர்கள் இலக்கியங்களையும் விவிலிய இலக்கியத்தையும் ஒப்பாய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றவர். அவருடைய ஆய்வேடு இப்போது ஒரு நூலாகவே இந்த மாநாட்டில் வெளியிடப்படுகிறது. விற்பனைக்கும் உள்ளது. பேராயர்க்கு நமது நன்றி உரியதாகும்.

சித்தர் பாட்டுகள் ஒரு சிலவற்றையேனும் கிறிஸ்தவக் கருத்துகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பதற்குரிய கைந்நூல் ஒன்றனை வெளியிடுவதெனக் கருதியே இச்சிறு கையேடு வெளிவருகிறது.

இம்மாநாட்டின் வழியாகவோ, இக்கையேட்டின் வழியாகவோ, கிறிஸ்துவை ஒரு சித்தராகவோ, அப்போஸ்தலர்களையும் தீர்க்கதரிசிகளையும சித்தர்களாகவோ நாம் எடுத்துரைக்கவில்லை. சித்தர்களிடத்தும் விவிலியத் தோன்றல்களிடத்தும் வீசிய ஒளி வீச்சுகளில் ஒற்றுமைகள் உண்டு என்பதையே குறிப்பிடுகிறோம். 'அனைத்து மனிதரையும் ஒளிர்விக்கும் உண்மையான ஒளி' அவரல்லரோ? (யோவான் 1:9).

கிறிஸ்துவின் சிந்தனைகளும் அவருடைய இயக்கமாகிய கிறிஸ்து நெறியும் இக்காலக்கட்டத்தில் அதிகமாகப் பேசப்படுவதும் செய்தித் தாள்களில் வெளியிடப்படுவதுமாகிய செய்தியாகி விட்டிருக்கிறது. எனவே, யார் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், துன்புறுத்தல்களும் வன்செயல்களும் அவிழ்த்து விடப்பட்டாலும் கிறிஸ்து நெறி இந்நாட்டில் பரவலாகி விரியும் என்பதில் ஐயமில்லை. கிரகாம் ஸ்டேய்ன்சும் அவருடைய மக்களும் சுட்டெரிக்கப்பட்ட சாம்பலிலிருந்து ஆயிரக்கணக்கான புதிய மலர்கள் மலர்ந்திடும். நம்மிடத்தில் வன்செயல் மருந்திற்கும் இல்லை. அன்பு செயல்தான் உண்டு. அது கடவுளின் அன்பு.

5.4.1999
சென்னைத் திருமண்டிலம்

**பொன்னு ஆ. சத்தியசாட்சி**
விழாக்குழுவின் சார்பில்

# 1. கடவுள் அன்பாகவே இருக்கிறார்

· **திரு அடியார் யோவான்** எழுதுகிறார் விவிலியத்தில்:

அன்பில்லாதோர் கடவுளை அறிந்து கொள்ளவில்லை ஏனெனில் கடவுள் அன்பாய் இருக்கிறார். நாம் வாழ்வு பெறும் பொருட்டுக் கடவுள் தம் ஒரே மகனை உலகிற்கு அனுப்பினார். இதனால் கடவுள் நம்மீது வைத்த அன்பு வெளிப்பட்டது. அவர் நம்மீது அன்பு கொண்டு தம் மகனை நம் பாவங்களுக்குக் கழுவாயாக அனுப்பினார் என்பதில்தான் அன்பின் தன்மை விளங்குகிறது (1 யோவான் 4:7-10 பொ.மொ.).

**இயேசு** மொழிந்தருளியது: நான் உங்களில் அன்பாயிருந்தது போல நீங்களும் ஒருவரிலொருவர் அன்பாயிருக்க வேண்டும் என்பதே என்னுடைய கற்பனை (யோவான் 15:12)

**புனித பவுல்:** நாம் பெற்றுள்ள தூய ஆவியின் வழியாய்க் கடவுளின் அன்பு நம் உள்ளங்களில் பொழியப்பட்டுள்ளது.

இயேசுவைப் பற்றித் **திரு.வி.க.:**

**மாசிலா அன்பே மகனாய்**
**உருக்கொண்ட மாணிக்கமே!**

அன்புநெறி சிறந்தது என அகிலம் அறிந்து உய்ய
ஆண்டவனே என் செய்தாய் அதை நினைக்கின் அந்தோ
என்புருகும் உயிருருகும் எண்ணமெல் லாம்உருகும்
எம்மொழியால் இயம்பவல்லேன் ஏழைமகன் அப்பா!
மன்னுலகில் அவதரித்தாய் மக்களிடை வதிந்தாய்
மறைமொழிந்தாய் அவ்வளவில் மனம்நிறைய விலையோ?
பொன்னுடலை வதைக்கவிட்டாய் பொலியுயிரை நீத்தாய்,
பொறைஅன்பு நீ என்னும் பொருண்மை தெளிந்தேனே!

**-கிறிஸ்துவின் அருள்வேட்டல்**

அன்பும் சிவமும் பற்றித் திருமூலர்:

**அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே** - திருமந்திரம்

குறிப்பு: மகாகவி கிருஷ்ணபிள்ளை கூறுமாறு, பரப்பிரமம், சிவம், அல்லா, எகோவா என்னும் கடவுட் சுட்டுகள் ஒரே கடவுளாகிய முழுமுதலாரைக் குறிக்கும் இரட்சணிய சமய நிர்ணயம்.

# 2. கடவுள் இல்லாமையிலிருந்து இருக்கின்றவைகளைப் படைத்தார்

இறந்தவர்களை வாழ்விப்பவரும் இல்லாததைத் தம் வார்த்தையால் இருக்கச் செய்பவருமாகிய கடவுள் மீது நம்பிக்கை கொண்டு அவர் முன்னிலையில் ஆபிரகாம் நம் தந்தையானார்.

- **புனிதர் பவுல்** (உரோமையார் 4:17)

**ஒப்பு**

**ஒன்றுமிலா வெளிக்குள்ளே பல்லண்டத்தை**
**நின்றிடச் செய்தானடி - குதம்பாய்**
**நின்றிடச் செய்தானடி**

**கருவிகள் இல்லாமல் காணும் பல்லண்டங்கள்**
**உருவுறச் செய்தானடி - குதம்பாய்**
**உருவுறச் செய்தானடி**

**- குதம்பைச் சித்தர்**

**ஒப்பு**

வானங்கள் இறைவனின் மாட்சியை வெளிப்படுத்துகின்றன வான்வெளி அவர்தம் கைகளின் வேலைப்பாட்டை விவரிக்கின்றது.

-கவியரசன் தாவிது (விவிலியத்தில் திருப்பாடல் 19:1)

தொடக்கத்தில் கடவுள் வானினையும் உலகினையும் படைத்தார்

- தொடக்க நூல் 1:1.

# 3. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்

உரோமாபுரியார்க்குப் **புனிதர் பவுல்** சொல்லுகிறார்: கடவுள் பற்று இல்லாத மனிதர்கள், கடவுளை அறிந்திருந்தும் அவருக்குரிய மாட்சியை அவருக்கு அளிக்கவில்லை. அழிவில்லாக் கடவுளை வழிபடுவதற்குப் பதிலாக அழிந்து போகும் மனிதரைப் போலவும், பறப்பன நடப்பன ஊர்வன ஆகியவற்றைப் போலவும் உள்ள உருவங்களை வழிபட்டனர். அவர்கள் கடவுளைப் பற்றிய உண்மைக்குப் பதிலாக பொய்மையை ஏற்றுக் கொண்டவர்கள். படைக்கப்பட்டவற்றை வழிபட்டு அவற்றிற்குப் பணி செய்தார்கள்; படைத்தவரை மறந்தார்கள் (விவிலியம், உரோமையர் முதலாவது அதிகாரம் முழுமையும் காண்க).

**நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பம் சாத்தியே**
**சுற்றிவந்து முணுமுணென்று சொல்லுமந்திரம் ஏதடா!**
**நட்ட கல்லும் பேசுமோ நாதனுள்ளிருக்கையில்**
**சுட்ட வட்ட சுட்டுவம் கறிச்சுவை அறியுமோ?**

**- சிவ வாக்கியர்**

(மண்ணினால் செய்யப்பட்டுச் சுடப்பட்ட சட்டிக்கு அதில் சமைக்கப்படுகிற கறியின் சுவை, தெரியாது என்பது யாவரும் அறிந்ததே. கடவுள் உள்ளத்திலிருக்கையில், நட்டு வைத்த கல் பேசாது என்பதும் யாவரும் அறிந்ததே. முணுமுணென்று ஓதப்படுகிற மந்திரங்கள் கடவுளை நினைப்பதற்கு ஏதுக்கள் ஆகும். எனவே நடப்பட்ட கல்லையே தெய்வமென்று நினையாதீர்.)

**எச்சமயத் தேவர்கட்கும் ஈசன்ஒரு வன்அலால்**
**மெய்ச்சமயத் தெவர்க்கும் எங்கெங்கு வெவ்வேறு தெய்வங்களோ?**
**மிச்ச ஆடு மாடு ஆனை வெம்புலி குரங்குநாய்**
**வச்சகல்லு சாணி மண்ணு ஆண்பெண் தெய்வம் அல்லவே!**

**- சிவ வாக்கியர்**

(ஈசனாம் கடவுள் ஒருவனே. தேவர்களாயினும், இல்லை. மெய்ச்சமயத்தைச் சேர்ந்த மனிதர்களேயாயினும் அவரவர்க்கு வெவ்வேறு கடவுளர்கள் உண்டோ? இல்லையே. இதையறியாமல் விலங்குகளையும் மற்றவற்றையும் கடவுளென்று எண்ணி அவற்றைத் தொழுவது சரியல்லவே)

# 4. பாவம் செய்யாதே

சினமுற்றாலும் பாவம் செய்தாதீர் (திருப்பாடல்கள் 4:4)
பாவம் செய்கிற உயிரே சாகும் (எசேக்கியல் 18:4)
இனிப் பாவம் செய்யாதே (யோவான் 5:14)
என் பாவத்தின் பொருட்டு நான் அஞ்சுகிறேன் (திருப்பாடல்: 38:18)
மகனே, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன (மத்தேயு 9:2)
மேற்கினின்று கிழக்கு எத்துணைத் தொலைவில் உள்ளதோ, அத்துணைத் தொலைவிற்கு நம் குற்றங்களை நம்மிடமிருந்து அவர் அகற்றுகிறார் (திருப்பாடல் 103:12)

ஒப்பு

**கருவெளிச் சித்தர் பாடல்**

**பாபஞ்செய் யாதிரு மனமே நாளைக்**
**கோபஞ் செய்தே யமன்**
**கொண்டோடிப் போவான்**
**பாபஞ்செய் யாதிரு மனமே.**

**நல்ல வழிதனை நாடு - எந்த**
**நாளும் பரமனை நத்தியே தேடு**
**நல்லவர் கூட்டத்திற் கூடு - அந்த**
**வள்ளலை நெஞ்சினில் வாழ்த்திக் கொண்டாடு.**

**மெய்ஞ்ஞானப் பாதையில் ஏறு - சுத்த**
**வேதாந்த வெட்ட வெளியினைத் தேறு**
**அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு - உன்னை**
**அண்டினோர்க் கானந்த மாம்வழி கூறு.**

**மெயக்குரு சொற்கடவாதே - நன்மை**
**மென்மேலும் செய்கை மிகவடக் காதே**
**பொய்க்கலையால்நட வாதே - நல்ல**
**புத்தியைப் பொய்வழி தனில்நடத் தாதே!**

## ஒப்பு

### திருவாரூர் திரு.வி.க.

கிறிஸ்து கிறிஸ்து என்போமே
கிட்டிய பாவம் பின்போமே!

ஏசுவே என்றதும் நெஞ்சுருகும்
எல்லாப் பாவமும் இரிந்தருகும்!

ஆணியில் சிந்திய செந்நீரே
அகிலம் புரக்கும் நன்னீரே!

பொய்யிலே நோக்கம் புகழிலே நாட்டம்
பொருந்திய வாழ்க்கையை வெறுத்து,
மெய்யிலே உள்ளம் பணியிலே பற்றும்
மேவுநல் வாழ்க்கையை விரும்பி,

ஐயனே கிறிஸ்து, அப்பனே என்றுன்
அடியிணை நாள்தொறும் நினைந்து
கையனேன் உருகிக் கசிந்ததை அறிவாய்
கர்த்தருள் கருணைமாக் கடலே!

குற்றமே உடையேன் குறைகளை வளர்த்தேன்
குறும்புகள் பலப்பல செய்தேன்
கற்றனன் நூல்கள் கழகநின் றறிவால்
கடபட உருட்டலைப் புரிந்தேன்
பற்றினேன் பொல்லாப் பாழ்நெறி நல்ல
பண்புறு நெறியினை நாடி
இற்றைநாள் உன்றன் எழிலடி அடைந்தேன்
ஏசுவே காத்தருள் இறையே!

- திரு.வி.க. கிறிஸ்துவின் அருள்வேட்டல்

# 5. அழுதால் அவனைப் பெறலாமே!

**அரசன் எசேக்கியாவுக்கு ஆண்டவர் சொன்னது:** உன் விண்ணப்பத்தைக் கேட்டேன், உன் கண்ணீரைக் கண்டேன் (2 அரசர் 20:5)
**கவியரசு தாவீது :** கடவுளே, உமது தோற்பையில் என் கண்ணீரைச் சேர்த்து வைப்பீராக (திருப்பா. 56,8)
**ஏசாயா :** ஆண்டவர் ... என்றுமே இல்லாதவாறு சாவை ஒழித்துவிடுவார். என் தலைவராகிய ஆண்டவர் எல்லா முகங்களிலிருந்தும் கண்ணீரைத் துடைத்துவிடுவார் (25:8).

கடவுள் அவர்களுடைய கண்ணீர் அனைத்தையும் துடைத்து விடுவார் (திருவெளிப் 7:17)

**கழுவியே ஆத்துமத்தைப் புடத்தில் போட்டு**
**காசகன்ற தட்சணையாய் வைத்துக் கொண்டு**
**மெழுகுவாய் இருதயத்தைக் கண்ணீராலே**
**மெழுகினபின் தேவபக்தி அதிலே வைத்துத்**
**தொழுகுவாய்த் தவஞான தீப மேற்றி**
**தோத்தரிப்பாய் சகலநன்மை சுரூபி கண்டாய்**

**- அகத்தியர்**

# 6. இறைவேண்டலாகிய செபம்

**இயேசு பெருமானின் சீடர்கள்:** ஆண்டவரே, செபம் செய்திட எங்களுக்குக் கற்பித்தருளும் (லூக்கா 11:1)

சோர்ந்துபோகாமல் எப்பொழுதும் செபம் செய்திடுக (லூக்கா 18:1).

**புனிதர் பவுல் :** நான் ஆவியினால் ஆட்கொள்ளப்பட்டு விண்ணப்பம் செய்வேன், கருத்துடன் விண்ணப்பம் செய்வேன் (1 கொரிந்தியர் 14:15).

இடைவிடாது இறைவனிடம் வேண்டுங்கள் (1 தெச. 5:17)

**பேரரசன் தாவீதின் வேண்டல் :** கடவுளே, உமது பேரன்புக்கேற்ப எனக்கு இரங்கும். உமது அளவற்ற இரக்கத்திற்கேற்ப என் குற்றங்களைத் துடைத்தருளும்.

### திருமூலர் வாக்கு

**சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவாய்**
**சூரிய காந்தமோ சூழ்பஞ்சைச் சுட்டிடா**
**சூரியன் சந்நிதி யிற்படு மாறுபோல்**
**ஆரியன் தோற்றமுன் - அற்ற மலங்களே.**

(திருமூலர் கி.பி. 6வது நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர், தலைமையான முதல் தமிழ்ச் சித்தர் இவர் எனலாம்.

வேண்டல் (செபம்) என்பது கடவுளின் சந்நிதியின் முன் நம்மை நிறுத்திக்கொண்டு வேண்டுதல் செய்வது, புகழ்வது, கேட்பது.

இந்தச் செய்யுளில் இவர் சொல்வது சூரியகாந்தம் எனும் கண்ணாடியையும் பஞ்சையும் சேர வைத்திருந்தாலும் பஞ்சு பஞ்சாகவேதான் இருக்கும்; பஞ்சு பற்றி எரியாது. ஆனால், தக்க முறையில் சூரிய காந்தத்தின் முன் பஞ்சை நிறுத்தினால் அது பஞ்சைப் பொசுக்கிவிடும். அவ்வாறே செபத்தில் நம்முடைய பாவங்கள் எரிந்து அகன்றுவிடும்).

செபத்தையே செய்வதற்குச் சீவன் வேணும்,
செபம் செய்யத் திருச்சித்தம் தேட வேணும்,
பவத்தையே ஒழிப்பதற்குக் கண்ணீர் வேணும்,
பரன்பாதம் அடைவதற்கு தபசு வேணும்,
அவத்தமாய்ப் பலதானம் பண்ண வேண்டாம்,
ஆறுகுளம் தனில்மூழ்கி அலைய வேண்டாம்,
சிவன்பேரில் ஆணைப்படி சொல்லிப் போட்டேன்,
தீட்சை பெற்று சிவபாதம் தேடுவாயே!

(குறிப்பு: இங்கே சிவன், சிவம் எனும் பெயர்கள் புராணங்களில் வருகின்ற சிவபெருமானைச் சுட்டுவதில்லை. திரு.வி.க. போன்ற பெரியோர்கள் சுட்டிக்காட்டிய முழுமுதற் கடவுளைக் குறிப்பன என்க).

# 7. பொறிபுலன் அடக்கம்

**ஆண்டவர் இயேசு:** ஒரு பெண்ணை இச்சையுடன் நோக்கும் எவரும் தம் உள்ளத்தால் ஏற்கனவே அந்தப் பெண்ணோடு விபசாரம் செய்தாயிற்று. உங்கள் வலக்கண் உங்களைப் பாவத்தில் விழச் செய்தால் அதை பிடுங்கி எறிந்துவிடுங்கள். உங்கள் வலக்கை உங்களைப் பாவத்தில் விழச் செய்தால் அதையும் வெட்டி எறிந்துவிடுங்கள். மத்தேயு 5:28,29,30.

**புனிதர் பவுல் :** சகோதர சகோதரிகளே, நீங்கள் உங்கள் சரீரங்களைத் தூய்மையும் கடவுளுக்கு உகந்தனவுமான உயிருள்ள பலியாகக் கடவுளுக்குப் படைத்துவிடுங்கள் (உரோமையார் 12:1)

கிறிஸ்து இயேசுவுக்கு உரியவர்கள் தங்கள் ஊனியல்பை அதன் இழிவுணர்ச்சிகளோடும் இச்சைகளோடும் சேர்த்துச் சிலுவையில் அறைந்துவிட்டார்கள் (கலாத்தியர் 5:24)

**பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு;**
**மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன:**
**மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்**
**பார்ப்பான் பசு ஐந்தும் பாலாய்ச் சொறியுமே! - திருமூலர்**

(அகம் என்பது வீடு; அதாவது உடம்பு, இந்த உடம்பில் இருந்துகொண்டு பொறிபுலன் வழியாக உலகில் நடப்பவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கும் 'பார்ப்பான்' என்பது ஆன்மா, ஆத்துமா, உள்மனிதன், உயிர். இந்த அகத்திலே (வீட்டிலே) பால் தரக்கூடிய (மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் பொறிகளாகிய) பசுக்கள் ஐந்து உண்டு. அவற்றை மேய்ப்பவர் இல்லையாயின் ஐந்து பொறிகளும் மனம்போன இடம் சென்று அலைந்து கெடும். ஆனால் அவற்றை மேய்ப்பவரும் ஏற்பட்டு அவ்வைந்து பொறிகளும் புலன்களும் அடங்கினால் பார்ப்பானின் பசுக்கள் ஐந்தும் மேலான நலன்களைத் தரும்).

**'அடல் வேண்டும் ஐந்தன்புலத்தை விடல் வேண்டும்**
**வேண்டிய எல்லாம் ஒருங்கு.**

எனும் திருக்குறளையும் இவற்றுடன் ஒப்பிடுக.

# 8. உண்மை ஞானியர் குழந்தைகளுக்கு ஒப்பானவர்கள்

சிறு பிள்ளைகளை என்னிடம் வரவிடுங்கள்; அவர்களைத் தடுக்காதீர்கள்; ஏனெனில் விண்ணரசு இத்தகையோர்க்கே உரியது.

நீங்கள் மனம் திரும்பிச் சிறு பிள்ளைகளைப் போல், ஆகாவிட்டால் விண்ணரசில் புகமாட்டீர்கள் என உறுதியாக உங்களுக்குச் சொல்கிறேன். இந்தச் சிறுபிள்ளையைப் போலத் தம்மைத் தாழ்த்திக் கொள்பவரே விண்ணரசில் மிகப் பெரியவர். இயேசு கிறிஸ்து. மத். 14, 14; 18.3,4. பொ.மொ.

**பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்து இட்ட பிச்சையெல்லாம்**
**நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று நன்மங்கையரைத்**
**தாய்போல் கருதி தமர்போல் அனைவர்க்கும் தாழ்மை சொல்லிச்**
**சேய்போல் இருப்பர்கண்டீர் உண்மை ஞானம் தெளிந்தவரே.**

**- பட்டினத்தார்**

பேய்போல் திரிவது முதலிய வாழ்க்கை முறையை மேற்கொண்டு வாழ்ந்தவர்கள் சித்தர்கள். இவ்வாறு வாழ்ந்து மங்கையரைத் தாய்போல் எண்ணி, எல்லாரையும் உறவினராக (தமராக) க் கருதித் தாழ்மையோடு பழகிக் குழந்தையைப் போலிருப்பார்கள். யார்? உண்மை ஞானியர்!

மாதர்களைத் தாய்போல் கருதிப் போற்றுவது நம்முடைய பண்பாட்டில் ஊறிக்கிடக்கும் ஒரு நற்பண்பு. பெண்டிரைத் தவறான நோக்கத்தோடு நோக்குவதே அவர்களிடம் தவறு செய்துவிட்ட பாவமாகும் என்று இயேசு பெருமான் அருளியிருப்பதும் இங்குக் கருதத் தக்கதாம் (மத்தேயு 5:28).

# 9. இறந்தவர் பிறப்பதில்லை

**திருவிவிலியம் சொல்வது:** மனிதர் ஒரே முறை சாவுக்கு உட்படுகின்றனர். பின்னர் இறுதித் தீர்ப்பு வருகிறது. இதுவே அவர்களுக்கென உள்ள நியதி. (எபிரேயர் 9:27)

**இயேசு மொழிந்தது:** பிறவியிலேயே பார்வையற்ற ஒருவரைக் கண்ட இயேசுவின் மாணாக்கர்கள் கேட்டார்கள். 'ஐயா, இவர் பார்வையற்றவராய்ப் பிறந்தது இவர் செய்த பாவத்தினாலா, இவரைப் பெற்றவர்கள் செய்த பாவத்தினாலா? 'மறுமொழியாக ஆண்டவர் சொன்னார், ' அது இவர் செய்த பாவத்தினாலும் வந்ததல்ல, இவரைப் பெற்றவர்கள் செய்த பாவத்தினாலும் வந்ததல்ல', கடவுளின் செயல் இவர் வழியாக வெளிப்படும்படியாகவே இவர் இவ்வாறு பிறந்திருக்கிறார்' இவ்வாறு சொல்லி அந்தப் பார்வையற்றவர் பார்வை பெறவும் செய்தார் இயேசு.

'வினைப்பயன்' எனும் கருத்துப்படி, ஒருவர் இறந்துவிட்டால் அவருடைய உயிர் வேறு ஓர் உடலில் பிறப்பெடுக்கும். நற்செயல்களைச் செய்தவர்களுக்கு அவர்களுடைய செயல்களுக்கு ஏற்ப நல்ல உடம்புகளில் பிறந்திடுவார்கள். மற்றவர்கள் இழிவான உடம்புகளில் பிறந்திடுவார்கள். இந்தக் கோட்பாட்டினை சித்தர்கள் மறுத்தார்கள்.

**கரந்தபால் மடிபுகா கடைந்த வெண்ணெய் மோர்புகாது**
**உடைந்துபோன சங்கின்ஓசை உயிர்களும் உடற்புகா**
**விரிந்தபூவும் உதிர்ந்தகாயும் மீண்டுபோய் மரம்புகா**
**இறந்தவர் பிறப்பதில்லை இல்லையில்லை இல்லையே!**
**- சிவ வாக்கியர்**

இந்தக் கருத்துக்களை வலியுறுத்துவதற்கு மைக்கேல் தமது நூலில் குதம்பைச் சித்தர் பாடல்களில் ஓரிரண்டை எடுத்துக் காட்டுகிறார்.

**தந்தைதாய் செய்வினை சந்ததிக்குஆம் என்பார்**
**சிந்தை தெளிந்திலரே - குதம்பாய்**
**சிந்தை தெளிந்திலரே.**

**பிள்ளைகள் செய்தன்மம் பெற்றோர்க் குறுமென்றல்**
**வெள்ளறிவாகும்மடி - குதம்பாய்**
**வெள்ளறிவாகுமடி.**

குதம்பைச் சித்தரின் வேறு சில பாக்களையும் நோக்குக:

**காயமெடுத்து ஆதிக் கர்த்தரை எண்ணார்க்கு**
**தீயாம் நரகமடி- குதம்பாய்**
**தீயாம் நரகமடி.**

**அன்போடு நற்புத்தி ஆதிமேல் வையார்க்குத்**
**துன்பாம் நரகமடி - குதம்பாய்**
**துன்பாம் நரகமடி.**

மோசஸ் மைக்கேல் ஆய்வுக் கட்டுரை பக்கங்கள் 183,184.

குதம்பையரின் இன்னொரு பா:

**மெய்ப்பொருள் கண்டு விளங்குமெய்ஞ் ஞானிக்குக்**
**கற்பங்க ளேதுக்கடி - குதம்பாய்**
**கற்பங்க ளேதுக்கடி.**

# 10. திருமுழுக்கு

தம்முடைய சீடர்களுக்கு இயேசுகிறிஸ்து இட்ட கட்டளை; 'நீங்கள் போய் எல்லா மக்களினத்தாரையும் சீடராக்குங்கள்; தந்தை மகன் தூய ஆவியார் பெயரால் திருமுழுக்கு கொடுங்கள். நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்களும் கடைப்பிடிக்கும்படிக் கற்பியுங்கள். (மத்தேயு 28:19,20, பொ.மொ.).

**புனிதர் பேதுரு** தம்மைக் கேட்கக் கூடியிருந்த மக்கட்குச் சொல்லியது; நீங்கள் மனம் மாறுங்கள். உங்கள் பாவங்களிலிருந்து மன்னிப்புப் பெறுவதற்காக ஒவ்வொருவரும் இயேசுகிறிஸ்துவின் பெயரால் திருமுழுக்கு பெறுங்கள். அப்பொழுது தூய ஆவியைக் கொடையாகப் பெறுவீர்கள். (திருத்தூதர் பணி 2:38 பொ.மொ).

தேரில் சென்று கொண்டிருந்த எகிப்து நாட்டின் அமைச்சர் ஒருவருக்குப் பிலிப்பு எனும் சீடர் இயேசுவின் நற்செய்தியைச் சொல்லவும், அமைச்சர் தண்ணீர் நிறைந்திருந்த ஓரிடத்தில் தேரினை நிறுத்திவிட்டுத் தமக்குத் திருமுழுக்கு செய்தருள வேண்டுமென்று கேட்க, இருவரும் தண்ணீரில் இறங்கிடப் பிலிப்பு எனும் அடியார் அவ்வமைச்சருக்குத் திருமுழுக்கு வழங்கினார் எனும் செய்தியைத் திருத்தூதர் பணிகள் 8:26-40 எனவரும் பகுதியில் காண்க.

**சங்கமதில் பரப்பிரமம் ஒன்றைப் போற்றி**
**சகலபவம் தீரநன்மை தனையே சாற்றி...**
**பொங்குதிரை கடல்மூழ்கித் தீட்சை பெற்றால்**
**புகழ்கிரியாம் கயிலாயம் போக லாமே!**

**– அகத்தியர் ஞானம்**

(சங்கம் - திருச்சபை பரப்பிரமம் - கடவுள், ஆண்டவர், தீட்சை - திருமுழுக்கு; கிரி - மலை, கயிலாயம் - மோட்சவுலகு)

கழுவியே ஆத்துமத்தைப் புடத்தில் போட்டுக
காசகன்ற தட்சணையாய் வைத்துக் கொண்டு
மெழுகுவாய இருதயத்தைக் கண்ணீராலே
மெழுகினபின் தேவபக்தி அதிலே வைத்துத்
தொழுகுவாய்த் தவஞானத் தீபம் ஏற்றித்
தோத்தரிப்பாய் சகலநன்மை சுரூபி கண்டாய்
முழுகுவாய் சிறுபொய்கைக் குள்ளே நீயும்
முக்திபரன் அருகிருப்பாய் முச்சுடராய்த் தானே!

- அகத்தியர் ஞானம்.

(காசகன்ற தட்சணை - பாவம் நீங்கிய காணிக்கை, குற்றமற்ற காணிக்கை, சகல நன்மை சுரூபி - எல்லா நன்மைகளுக்கும் காரணராகிய கடவுள்; நன்மை என்பது அவரே. யாக்கோபு 1:17 காண்க. சிறு பொய்கை - சிறுகுளம், திருமுழுக்குக்கான சிறிய நீர் நிலை, முக்திபரன் அருகிருப்பாய் முச்சுடராய்த் தானே - மோட்சத்தைத் தருகிற ஆண்டவரின் அருகில் வாழ்வாய், எவ்வாறெனில் தந்தையார் மைந்தனார் ஆவியார் என முச்சுடராக உள்ள அவர் ஒளியில் தோய்ந்திருப்பாய்)

# 11. அலகை

அலகை (சாத்தான்) தன்னைக் கடவுளுக்கு சமமாக நிறுத்திக் கொள்ள முயன்று வஞ்சக மொழி பேசி ஆதி மனிதர்களை வழி திருப்பி அவர்களைக் கெடுத்தான். அவன் செய்திகள் திருவிவிலியத்தில் தொடக்க நூலில் 3 ஆவது அதிகாரம், மற்றும் எசேக்கியேல் 28, மத்தேயு 2:16,17 லூக்கா 4:1-13, யோவான் 18:27 முதலிய பலப்பல இடங்களில் சொல்லப்பட்டுள்ளன. இயேசுகிறிஸ்து சிலுவையில் தொங்கியபோது கடவுளின் பேரன்புக்கு எதிராக அலகை போர்தொடுத்தான். அங்கே அவன் படுதோல்வியுற்றான். எனினும், தோற்றுப்போன எதிர்க்கட்சி ஆட்சியிலிருப்பதைப் போல, அவன் தன் தீய அதிகாரத்தால் உலகத்தை ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறான். ஆயினும் இறுதியில் அவன் அழிக்கப்பட்டுப் படுபாதாளத்தில் தள்ளப்படுவான் (வெளி. 20:9,10)

இதனை உணர்த்துகின்றஅகத்தியர் பாட்டு வருமாறு:

**அலகையது தேவனுக்குச் சரியாய் நின்று**
**ஆங்காரம் தானெடுத்து அகந்தையாலே**
**நிலைகுலைந்து பாதாளக் குழிக்குள் நின்று**
**நித்தியமும் மானிடரை மோசம்போக்கி**
**பலகலையும் உணர்அறிவை மயக்கித் தங்கள்**
**பாதாள வீடதிலே பதுங்கச் செய்யும்**
**நிலையதுவை அறியாமல் போறார் போறார்**
**நினைத்துப்பார் புலத்தியனே நிசமாய்த்தானே**

**- அகத்தியர் ஞானம்**

# 12. மனிதனுக்குள் கடவுள்

ஆண்டவர் இயேசு செபித்தருளியது: தந்தையே, ... உண்மையான ஒரே கடவுளாகிய உம்மையும் நீர் அனுப்பிய இயேசு கிறிஸ்துவையும் அறிவதே நிலைவாழ்வு (யோவான் 17:3)

**புனிதர் பவுல் :** இறைமக்கள் அனைவரோடும் சேர்ந்து, கிறிஸ்துவினுடைய அன்பின் அகலம் நீளம் உயரம் ஆழம் என்னவென்று உணர்ந்து அறிவுக்கு எட்டாத இந்த அன்பை அறிந்துகொள்ளும் ஆற்றல் பெறுவீர்களாக (எபேசியர் 3:18,19 பொ.மொ).

1 யோவான் 4:12, 'கடவுளை ஒருவரும் ஒருபோதும் கண்டதில்லை. நாம் ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூர்ந்தால் கடவுள் நமக்குள் நிலைத்திருக்கிறார்' மற்றும் கொலோசெயர் 1:27. ஓர் இரகசியம், 'கிறிஸ்து மாட்சியுறுவோம் எனும் நம்பிக்கையாக உங்களுக்குள் இருப்பதே இந்த இரகசியம்'

**தன்னை அறியத் தனக்கொரு தீங்கில்லை**
**தன்னை அறியாமல் தான்கெடு கின்றனன்**
**தன்னை அறியும் அறிவை அறிந்தபின்**
**தன்னை அருச்சிக்கத் தானிருந் தனனே!**

**- திருமூலர்**

(இங்கு 'தான்' எனும் சொல் கடவுளைச் சுட்டுவது, தன்னை அறிவது என்பது கடவுளை அறிவது எனப் பொருள்படும்). சிவ வாக்கியரின் பாட்டொன்றும் இங்குக் கருதுவதற்கு உரியதாகும்.

**என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்த தில்லையே**
**என்னிலே இருந்த ஒன்றை யானறிந்து கொண்டபின்**
**என்னிலே இருந்த ஒன்றை யாவர்காண வல்லரோ?**
**என்னிலே இருந்திருந்து யானுணர்ந்து கொண்டனே!**

என்னவென்று சொல்லுவேன் இலக்கணம் இலாததைப்
பன்னுகின்ற செந்தமிழ்ப் பதங்கடந்த பண்பென
மின்னகத்தில் மின்னொடுங்கி மின்னதான வாறுபோல்
என்னகத்துள் ஈசனும் யானுமல்ல தில்லையே!

- சிவ வாக்கியர்

என்னுள்ளே நீ பிறந்தாய் ஏசு பெருமானே
உன்னுள்ளே யானிறந்தேன் உற்று.

- திரு.வி.க.

நீங்கள் கடவுளுடைய கோவிலென்றும் கடவுளின் ஆவியார் உங்களில் குடியிருக்கிறார் என்றும் உங்களுக்குத் தெரியாதா?

- **புனிதர் பவுல்.** (1 கொரி 3:16).

# 13. வெளி வேடம்

**இயேசு பெருமானின் கடிந்துரை:** குருட்டு வழிகாட்டிகளே, நீங்கள் பருகும்போது கொசுவை வடிகட்டி அகற்றுகிறீர்கள். ஆனால், ஒட்டகத்தையோ விழுங்கி விடுகிறீர்கள்.

வெளிவேடக்கார மறைநூல் அறிஞரே, பரிசேயரே, ஐயோ ! உங்களுக்குக் கேடு! ஏனெனில் நீங்கள் கிண்ணத்தையும் தட்டையும் வெளிப்புறத்தில் தூய்மையாக்குகிறீர்கள். ஆனால், அவற்றில் உட்பக்கத்தையோ கொள்ளைப் பொருள்களாலும் தந்நல விருப்புகளாலும் நிரப்புகிறீர்கள். குருட்டுப் பரிசேயரே, முதலில் கிண்ணத்தின் உட்பக்கத்தைத் தூய்மையாக்குங்கள். அப்பொழுது அதன் வெளிப்புறமும் தூய்மையாகும்.

வெளிவேடக்கார மறைநூல் அறிஞரே, பரிசேயரே, ஐயோ! உங்களுக்குக் கேடு! ஏனெனில் நீங்கள் வெள்ளையடித்த கல்லறைகளுக்கு ஒப்பானவர்கள். அவை புறத்தே அழகாகத் தோற்றமளிக்கின்றன. அவற்றின் உள்ளேயோ இறந்தவர்களின் எலும்புகளும் எல்லா வகையான அழுக்குகளும் நிறைந்திருக்கின்றன. அவ்வாறே, நீங்களும் வெளியே மக்களுக்கு நேர்மையாளராய்த் தோற்றமளிக்கிறீர்கள். ஆனால் உள்ளேயோ போலித்தனமும் நெறிகேடும் நிறைந்தவர்களாயிருக்கிறீர்கள் (மத்தேயு 23 முழுமையும் காண்க).

**தாடி வளர்த்துச் சடைவளர்த்து - நல்ல**
**சந்நியாசி என்றொரு வேடமிட்டு**
**ஓடித் திரிந்த புலையாட்டை - இங்கு**
**ஒப்புவ தாரடி ஞானப்பெண்ணே.**

- ஞானக்கும்மி

(புலையாடு என்றது தாடி முளைத்திருக்கும் வெள்ளாட்டை)

**சகலமுமே வந்ததென்று வேடம் பூண்டு**
**சடைமுடியும் காசாயந் தன்னைச் சாற்றி**
**இகலுமனம் அடங்காமல் நினைவு வேறாய்**
**எண்ணமெலாம் பெண்ணாசை பூசை தானே!**

- ஞானக்கோவை

காவியு டுத்துந் தாழ்சடை - வைத்துங்
காடுகள் புக்குந் - தடுமாறி
காய்கனி துய்த்தும் காயமொ றுத்தும்
காசினி முற்றும் - திரியாதே
சீவஒ டுக்கம் பூதவொ டுக்கம்
தேறவு திக்கும் - பரஞான
தீபவி ளக்கங் காணஎ னக்குன்
சீதள பத்மம் - தருவாயே

- அருணகிரியார் திருப்புகழ்

மழித்தலும் நீட்டலும் வேண்டா நெஞ்சம்
பழித்தது ஒழித்து விடின்

- திருக்குறள்

(மழித்தல் - மொட்டையடித்தல், நீட்டல் - நீண்ட தாடி சடை வளர்த்தல்)

# 14. இறப்பிற்குப் பின்

கிறிஸ்து நெறி சொல்லுகின்றபடி , இயேசுவில் நம்பிக்கை வைத்து இறந்தோர் யாவரும் ஒருநாளில் அவருடைய அதிகாரத்தின்படி மீண்டும் உயிர்பெற்று எழுவார்கள். எழுந்து கடவுளுடன் என்றென்றும் வாழ்வார்கள். நம்பிக்கை வையாதோரும் மீண்டும் உயிர்பெற்று எழுந்து அவரவர் செய்த நன்மை தீமைகளுக்கேற்பக் கடவுளின் தீர்ப்பைப் பெறுவார்கள். இயேசுவின் திருத்தூதுவர்களே அல்லாமல் இயேசு இந்த உண்மையை வலியுறுத்திச் சொல்லியிருக்கிறார். காலம் வருகிறது. ஏன் வந்தேவிட்டது. அப்போது இறைமகனில் குரலை இறந்தோர்க் கேட்பர். அதைக் கேட்போர் வாழ்வர் என உறுதியாக உங்கட்குச் சொல்லுகிறேன், என்றார் அவர். (யோவான் 5:25). மேலும் 1 கொரிந்தியர் 15. 1 தெசலோனிக்கேயர் 4 மற்றும் பல பகுதிகளைப் படித்துத் தெரிந்திடுக.

கீழே தரப்படுகிற செய்யுளில் சிவவாக்கியர், இது உண்மைதானோ? என்றோர் ஐயவினா எழுப்புகிறார்.

**ஏசுமத வாதிகள் இறந்தபின் கடைசியில்**
**பாசம்வைத் தொருமிக்கப் பலரையும் எழுப்பியே**
**நேசமுறப் பாபத்தை நிராகரித்து மோட்சத்தில்**
**வாசமிக வைக்கவே சர்வேசர் வரலுண்மையோ?**

– சிவ வாக்கியர்

**மரணமுற்று உயிர்த்தெழுந்த**
**இயேசுவின் மங்கல மொழி**

‘ நீங்கள் மனம் கலங்கிடல் வேண்டாம். கடவுளிடம் நம்பிக்கை கொள்ளுங்கள். என்னிடமும் நம்பிக்கை கொள்ளுங்கள். என் தந்தை வாழுமிடத்தில் உறைவிடங்கள் பல உள்ளன. அப்படியில்லை எனில், உங்களுக்கு இடம் ஏற்பாடு செய்யப்போகிறேன் என்று சொல்லியிருப்பேனா? நான் போய் உங்களுக்கு இடம் ஏற்பாடு செய்தபின் திரும்பி வந்து உங்களை என்னிடம் அழைத்துக் கொள்வேன். அப்போது நான் இருக்கும் இடத்திலேயே நீங்களும் இருப்பீர்கள்.
- விவிலியம். யோவான் 14:1-3.

# 15. யோக சமாதி

சமாதி என்பது ஆழ்ந்த அமைதி நிலை. உடலின் பொறிகளை அடக்கிப் புலன்களைத் தூய்மையுறச் செய்து மூச்சையும் அடக்கி நெடிய நிட்டையில் அமர்ந்து இறைவனோடு கலந்திருப்பதாகிய ஞானப்பால் அருந்திய பட்டறிவில் உள்ளொளி பெருக அசைவற்றுக் கிடக்கும் நிலை யோக சமாதி எனப்படுகிறது.

அந்த அகண்ட அமைதியில் கிடந்து உள்ளொளி பீறிடப் பெற்று உலகத்தில் உலாவி மக்கட்கு நன்னெறி புகட்டி வாழ்ந்தவர்களும் உண்டு.

இவ்வாறு யோசமாதி நிலையை உகந்திருக்கும் சித்தர்களைப் பற்றி கி.பி. 6 ஆவது நூற்றாண்டுத் தமிழச் சித்தர் திருமூலர் பாடுகிறார்.

கிறிஸ்தவத்தில் யோகசமாதி நிலை என்றொன்று நேரிடையாகப் பேசப்படுவதில்லை. எனினும் யோகசமாதியின் சூழ்நிலையில் இருந்திருக்கிறவர்கள் விவிலியத்தில் வாழ்கிறார்கள் என்று கருதிடலாம்.

நாற்பது நாட்கள் உண்ணா நோன்பிருந்து கடவுளின் திருவுளத்தைத் தெரிந்துகொளஎல் எனும் (யோக) முறை ஒன்று விவிலியத்தில் குறிப்பாக உணர்த்தப்படுகிறது. புனிதர் பவுல் தமக்கு ஏற்பட்டதோர் ஆழ்நிலை அனுபவம் பற்றிப் பேசுகிறார் (1 கொரிந்தியர் 12:1-6)

திருமூலர் பாட்டு பின்வருமாறு:

**யோக சமாதியின் உள்ளே அகலிடம்**
**யோக சமாதியின் உள்ளே உளஒளி**
**யோக சமாதியின் உள்ளே உளசக்தி**
**யோக சமாதி உகந்தவர் சித்தரே**

ஆழ்நிட்டை நிலையில் ஓரிடத்திலேயே இருந்து கொண்டு உலகில் தாம் விரும்பும் இடங்களுக்குச் சென்று மீளுதல், ஞான ஒளியைப்

பெற்று மகிழ்ந்திருத்தல், மிக்க ஆற்றலை உடையவர்களாக இருத்தல் முதலிய பேறுகள் வாய்த்திடுகின்ற சமாதி நிலையை மிக விரும்பி வாழ்பவர் சித்தர்.

இறைவாக்கினர் எலியா கடவுளின் தூதன் கொடுத்த அடையையும் தண்ணீரையும் அருந்தியபின் நாற்பது நாட்களாக நடந்து ஒரேபு மலையைச் சேர்ந்தார். அம்மலையிலிருந்து குகை ஒன்றில் அவர் தங்கியிருந்தபோது கடவுளே அவரிடம் பேசினார். (1 அரசர் அதி. 19).

எலிசா எனும் இறைவாக்கினார் ஆற்றில் விழுந்து ஆழ்ந்துவிட்ட இரும்புக் கோடரியை மிதக்கச் செய்தார் (2 அரசர் 6:5). தன் தலைவராகிய எலிசாவுக்குத் தெரியாமல் அவருடைய வேலையாள் பொருளாசை கொண்டு நாகமானைப் பின்தொடர்ந்து சென்றபோது எலிசாவின் மனம் அவன்பின் சென்றது (2அரசர் 5.25,26).

விடுதலை பேசிய தலைவர் மோசே எகிப்திய மன்னன் முன்னிலையில் தம் கோலை எறிந்தபோது அது பாம்பாக மாறிற்று.

புனிதர் பவுல் அவர் மெலித்தா எனும் தீவில் இறங்கியபோது கொடிய நச்சுப்பாம்பு அவரைக் கவ்விக் கொண்டது. மற்றவர்கள் எதிர்பார்த்தபடி அவர் சாகவில்லை. (அப். திருத்தூதர் பணி 23:3,8).

அவர் தாம் தனிமையில் இருந்தபோது வான் அடுக்குகளைத் தாண்டி மூன்றாவது வானத்திற்கு அள்ளிச் செல்லப்பட்டார். அங்கு அவர் கண்டறியாத காட்சிகளைக் கண்டார். கேட்டறியாத மொழிகளைக் கேட்டார். (2 கொரிந்தியர் 12: 1-4)

மணிவாசகராகிய யோவான் எவரும் கண்டிராத தெய்வீகக் காட்சிகளைக் கண்டு திருவெளிப்பாடு எனும் ஒரு தரிசன நூலையே எழுதியிருக்கிறார். இது விவிலியத்திலுள்ள நிறைவுப்பகுதி. இப்படிப்பட்ட பல அரிய அற்புத நிகழ்ச்சிகள் திருவிவிலியத்தில் சொல்லப்படுகின்றன. இவைகளும் சித்து செயல்கள்தாமோ என்றோர் அய்யம் நமக்குத் தோன்றுகிறது. இவற்றை அவ்வாறு நாம் இதுவரை கொண்டதில்லை. ஏனெனில் சித்தர்களைப் போல் கடுமையான தவமியற்றிப் பெற்ற சித்துகள் அல்ல இவைகள்.

எனினும் சித்தர்களின் செயற்கரிய செயல்கள் இவற்றைச் சில கோணங்களில் ஒத்திருக்கின்றன.

டாக்டர் மைக்கேல் தம்முடைய நூலில் போகர் என்றொரு சித்தரை அறிமுகம் செய்து வைக்கிறார். போகர் ஒரு கிறிஸ்தவர் எனத் தெரிகிறது. அவர் தாம் இருந்த இடத்தில் இருந்து கொண்டே மெக்காவுக்கும் எருசலேமுக்கும் சென்று அரிய காட்சிகளைக் கண்டு மீண்டதாக அவரே சொல்லுகிறார். போகரின் பாடல்களில் ஒன்று பின்வருமாறு: அவர் எகிப்திய அரசர்களின் சமாதிகளைக் கண்டதாகவும், இயேசுவின் சீடர்கள் மற்றும் இம்மானுவேலின் சமாதி முதலியவற்றைத் தம் நிட்டை நிலையிலேயே கண்டதாகவும் கூறுகிறார்.

**போகர் சத்த காண்டம்**

**இறங்கினேன் ராசரிட சமாதி கண்டேன்**
**எழிலான ஏசுவின்றன் சீடர் கண்டேன்**
**சுறங்கமுடன் இம்மான்வேல் சமாதி கண்டேன்**
**சுத்தனாம் பரிசுத்தர் சமாதி கண்டேன்**
**வரங்கொடுக்கும் இசுரவேல் சமாதி கண்டேன்**
**வளமுடனே ரோமபுரி தேசத்தார்கள்**
**திறமுடனே ரோமாபுரிக் கோட்டைக்குள்ளே**
**போகுவதும் வருகுவதும் கண்டேன் தானே!**

**திண்ணமாய் எகிப்பத்து தேசங் கண்டேன்**
**திடமுள்ள மாதாவின் தேசம் போனேன்**
**வண்ணமுடன் யூதாவில் கோடான கோடி**
**வனந்தனிலே ரிஷிகளப்பா சொல்லொணாது**
**என்னவே ஏசுவின்தன் மகிமைமெத்த**
**எடுத்துரைத்தார் சீசர்வர்க்க மனேகம்பேர்கள்**
**சன்னமுடன் மலையெல்லாஞ்சுற்றி வந்தேன்**
**சாங்கமுடன் ஈசாக்கு சமாதியுண்டு**

**காட்டிவந்தேன் சீனபதி தன்னில் சென்றேன்**
**கடவுளாம் ஏசுவின்றன் காட்சிகண்டேன்**

இந்தக் கையேட்டில் விவிலியத் திருமறையிலிருந்து எடுக்கப்பட்டுள்ள மேற்கோள்கள் பெரும்பான்மையும் திருவிவிலியம் எனும் பொது மொழி பெயர்ப்பிலிருந்து கொள்ளப்பட்டவை. பிற மேற்கோள்கள் ஓரிரு மொழிபெயர்ப்புகளின் தழுவல்கள்.

## ஒரு தெரிவிப்பு

இச்சிறு கையேடு தயாரிக்கப்படுவதற்கு மூலநூலாக அமைந்த டாக்டர் மோசஸ் மைக்கேல் பாரடே அவர்களது '**தமிழ்ச் சித்தர்கள் பாடல்களும் விவிலியமும்**' **கடவுட் கொள்கைகள்** (ஓர் ஒப்பாய்வு) எனும் (பிஎச்.டி.) முனைவர் பட்ட ஆய்வு நூல், விரிவாக்கப்பட்ட பதிப்பாக இன்னும் சில திங்கள்களில் மறுபதிப்பு செய்யப்பட உள்ளது. இந்நூற்படி பெற விரும்புவோர், நூலாசிரியரைப் பின்வரும் தொலைபேசி எண்ணில் / மின்னஞ்சல் வழி தொடர்பு கொண்டு முன்பதிவு செய்து கொள்ளலாம்.

முனைவர் **மோ. மைக்கேல் பாரடே**
தொலைபேசி : 9003197577
மின்னஞ்சல் : mmftamizh@gmail.com

## வணங்குவாய் !
## இயேசு கிறிஸ்துவாம் ஜெகஜோதியை !

**வணங்குவாய் செகசோதி ஒருவ னாகி**
**மானிலத்தை ஒருநொடியில் வகுத்தே மண்ணில்**
**குணமான மனிதரையும் படைத்த பின்பு**
**குவலயத்திற் தானுதித்துக் குருவாய் வந்து**
**பணமான சமுசாரம் ஒன்றில்லாமற்**
**பரதேசி போலிருந்து தவத்தைக் காட்டி**
**தணமான சித்தர்களை இறுத்திப் போட்டு**
**மீதவஞ்செய்த பெரியோரை அண்டு வாயே!**

(* அகண்ட தளம் சென்றவரை அண்டுவாயே என்றும் பாடம்)
(**அகஸ்தியர் ஞானவிளக்கம் 34** என்ற நூலில் இடம் பெற்றுள்ள பாடல்)

**பொழிப்புரை :**

உலகத்தின் பேரொளியாய் விளங்கும் தகுதிப்பேறு உடையவன் தானொருவனே ஆகி, இவ்வுலகமனைத்தையும் ஒருகணத்தில் படைத்து இவ்வுலகில் பண்பான மானுடவினத்தையும் படைத்தபின்பு, இவ்வுலகில் தானே மனிதனாய் அவதரித்து அனைவருக்கும் பரம குருவாக இவ்வுலகில் வாழ்ந்து பாரமான இல்லறவாழ்வு ஒன்றையும் மேற்கொள்ளாமல் துறவறம் பூண்ட எளிய பரதேசி போல, தவவாழ்வு மேற்கொண்டு, இவ்வுலகில் தன் உச்சகட்டத் தியாகத்தை வெளிக்காட்டி தனக்குப்பின் தன் அடியவர்களான சித்தர்களை இவ்வுலகில் விட்டு, தான் தவ உலகம் (பரந்த மேலோகம்) சென்றவனாகிய அப்பெரியோனையே அண்டிக்கொண்டு (அவரையே வணங்கி)உய்வுபெறுவாயாக!



**கிருபா பதிப்பக வெளியீடு**

கேம்ப் ரோஜ் பாக்கியம் பிரஸ் - 9025 95081